# ஸ்வாமியே சரணம் ஐயப்பா



# பக்தி பாடல்கள்



*ஸ்ரீ உத்தர குருவாயூரப்பன் துணை*
*ஸ்வாமியே சரணம் ஐயப்பா*

K. Srinivasan

பிளாட் எண் : 2. தேவ்
அப்பார்ட் மெண்ட்,
64, M.G. ரோடு
சாஸ்திரி நகர்,
சென்னை – 41.
Phone : 446 0561

# சமர்ப்பணம்

திருவருள் மிகு நங்கநல்லூரில் எழுந்தளிருளி எங்கள் உள்ளம் கவர் அழகன் ஸ்ரீ உத்தர குருவாயூரப்பன் அருளாலும், கடந்த 20 வருடங்களாக ஒவ்வொரு வருடமும் தன்வசம் எங்களை இழுக்கும் சத்ய ஸ்வரூபன் எழில் கொஞ்சும் சபரிவாழ் ஸ்ரீ தர்ம சாஸ்தா அனுக்கிரஹத்தாலும், எங்களை வழி நடத்திச் செல்லும் அன்புமிகு ஸ்ரீ வெங்கட்ராம குருசாமி அருளாசியினாலும் நான் இச்சிறு, ஐயனின் பாடல் தொகுப்பு புத்தகத்தை நங்க நல்லூர் "ஸ்ரீ கிருஷ்ணா" ஐயப்பா பக்தர்கள் குழுவின் சார்பாக இலவச வெளியீடாக சமர்பிக்கிறேன். எல்லா ஐயன் பக்தர்களும் இப்பாடல்களை பஜனை செய்து ஐயனின் பரிபூரண அருளை பெற வேண்டுகிறேன்.

சென்னை.
21-04-2002

அன்புடன்
K. ஸ்ரீனிவாசன்

# 108 ஸ்ரீ ஐயப்ப சரண கோஷங்கள்

| | | |
|---|---|---|
| 1 | ஸ்வாமியே | சரணம் ஐயப்பா |
| 2 | ஹரிஹர ஸுதனே | ,, |
| 3 | கன்னிமூல கணபதி பகவானே | ,, |
| 4 | சக்தி வடிவேலன் ஸோதரனே | ,, |
| 5 | மாளிகப்புரத்து மஞ்சம்மாதேவி லோக மாதாவே | ,, |
| 6 | வாவர் ஸ்வாமியே | ,, |
| 7 | கருப்பண்ண ஸ்வாமியே | ,, |
| 8 | பெரிய கடுத்த ஸ்வாமியே | ,, |
| 9 | சிறிய கடுத்த ஸ்வாமியே | ,, |
| 10 | வன தேவத மாரே | ,, |
| 11 | துர்கா பகவதி மாரே | ,, |
| 12 | அச்சன் கோவில் அரசே | ,, |
| 13 | அனாத ரட்சகனே | சரணம் ஐயப்பா |
| 14 | அன்னதானப் பிரவுவே | ,, |
| 15 | அச்சம் தவிர்ப்பவனே | ,, |
| 16 | அம்பலத்தரசனே | ,, |
| 17 | அபயதாயகனே | ,, |
| 18 | அகந்தை அழிப்பவனே | ,, |
| 19 | அஷ்டஸித்தி தாயகனே | ,, |
| 20 | அண்டினோரை ஆதரிக்கும தெய்வமே | ,, |

21 அழுதையில் வாஸனே ,,
22 ஆர்யங்காவையாவே ,,
23 ஆபத் பாந்தவனே ,,
24 ஆனந்த ஜோதியே ,,
25 ஆத்மஸ்வரூபியே ,,
26 ஆனைமுகன் தம்பியே ,,
27 இருமுடிப்ரியனே ,,
28 இன்னலைத் தீர்ப்பவனே ,,
29 இகபரஸுக தாயகனே ,,
30 இதயகமல வாஸனே ,,
31 ஈடில்லா இன்பமளிப்பவனே ,,
32 உமையவள் பாலகனே ,,
33 ஊமைக்கு அருள் புரிந்தவனே ,,
34 ஊழ்வினை அகற்றுவோனே ,,
35 ஊக்கம் அளிப்பவனே சரணம் ஐயப்பா
36 எங்கும் நிறைந்தோனே ,,
37 எண்ணில்லா ரூபனே ,,
38 என் குல தெய்வமே ,,
39 என் குருநாதனே ,,
40 எருமேலி வாழும் சாஸ்தாவே ,,
41 எங்கும் நிறைந்த நாதப்ரஹ்மமே ,,
42 எல்லோர்க்கும் அருள்புரிபவனே ,,
43 ஏற்றுமானூரப்பன் மகனே ,,
44 ஏகாந்த வாஸியே ,,

45 ஏழைக்கருள் புரியும் ஈசனே ”
46 ஐந்துமலை வாஸனே ”
47 ஐயங்கள் தீர்ப்பவனே ”
48 ஒப்பில்லா மாணிக்கமே ”
49 ஓம்கார பரப்ரஹ்மமே ”
50 கலியுக வரதனே ”
51 கண்கண்ட தெய்வமே ”
52 கம்பங்குடிக்குடைய நாதனே ”
53 கருணா ஸமுத்ரமே ”
54 கற்பூர ஜோதியே ”
55 சபரிகிரி வாஸனே ”
56 சத்ருஸம்ஹார மூர்த்தியே ”
57 சரணாகத ரக்ஷகனே சரணம் ஐயப்பா
58 சரண கோஷப்ரியனே ”
59 சபரிக்கு அருள் புரிந்தவனே ”
60 சம்புகுமாரனே ”
61 ஸத்ய ஸ்வரூபனே ”
62 ஸங்கடம் தீர்ப்பவனே ”
63 ஸஞ்சலம் அழிப்பவனே ”
64 ஷண்முக ஸோதரனே ”
65 தன்வந்தரி மூர்த்தியே ”
66 நம்பினோரைக் காக்கும் தெய்வமே ”
67 நர்த்தன ப்ரியனே ”
68 பந்தள ராஜகுமாரனே ”

69 பம்பை பாலகனே ,,
70 பரசுராம பூஜிதனே ,,
71 பக்த ஜன ரக்ஷகனே ,,
72 பக்த வத்ஸலனே ,,
73 பரமசிவன் புத்திரனே ,,
74 பம்பா வாஸனே ,,
75 பரம தயாளனே ,,
76 மணிகண்டப் பொருளே ,,
77 மகர ஜோதியே ,,
78 வைக்கத்தகப்பன் மகனே ,,
79 கானக வாஸனே சரணம் ஐயப்பா
80 குளத்துப் புழை பாலகனே ,,
81 குருவாயூரப்பன் மகனே ,,
82 கைவல்ய பத தாயகனே ,,
83 ஜாதிமத பேதமில்லாதவனே ,,
84 சிவசக்தி ஐக்ய ஸ்வரூபனே ,,
85 ஸேவிப்பவர்க்கானந்த மூர்த்தியே ,,
86 துஷ்டர் பயம் நீக்குவோனே ,,
87 தேவாதி தேவனே ,,
88 தேவர்கள்துயரம் தீர்த்தவனே ,,
89 தேவேந்தர பூஜிதனே ,,
90 நாராயணன் மைந்தனே ,,
91 நெய்யபிஷேக ப்ரியனே ,,
92 ப்ரணவ ஸ்வரூபனே ,,

93 பாப ஸம்ஹார மூர்த்தியே ”
94 பாயஸான்ன ப்ரியனே ”
95 வன்புலி வாஹனனே ”
96 வரப்ரதாயகனே ”
97 பாகவதோத்தமனே ”
98 பொன்னம்பலவாஸனே ”
99 மோஹினீ ஸுதனே ”
100 மோஹன ரூபனே சரணம் ஐயப்பா
101 வில்லன் வில்லாளி வீரனே ”
102 வீரமணி கண்டனே ”
103 ஸத்குரு நாதனே ”
104 ஸர்வரோக நிவாரண தன்வந்தரி மூர்த்தியே ”
105 ஸச்சிதாநந்த ஸ்வரூபனே ”
106 ஸர்வாபீஷ்ட தாயனே ”
107 சாச்வதபதம் அளிப்பவனே ”
108 பதினெட்டாம்படிக்குடைய நாதனே சரணம் ஐயப்பா!

## ஓம்

அடியேன் தெரிந்தும் தெரியாமலும் செய்த ஸகல குற்றங்களையும் பொறுத்து காத்தருள வேண்டும் ஸ்ரீ ஸத்தியமான பொன்னு பதினெட்டாம் படிமேல் வாழும் ஸ்ரீ ஹரிஹர ஸுதன் கலியுக வரதன், ஆநந்த சித்தன், ஐயன் ஐயப்ப ஸ்வாமியே சரணம் ஐயப்பா.



# விநாயகர் ஸ்துதி

கஜானனம் பூத கணாதி ஸேவிதம்
கபித்த ஜம்பு பல ஸார பக்ஷிதம் உமாசுதம்
சோக விநாஸ காரணம் நமாமி
விக்னேஸ்வர பாத பங்கஜம்.

கைத்தல நிறைகனி அப்பமொடவல் பொரி
கப்பிய கரிமுகன் அடிப்பேணிக்

கற்றிடும் அடியவர் புத்தியிலுறைபவ
கற்பக மெனவினைகடிதேகும்

மத்தமு மதியமும் வைத்திடுமரன் மகன்
மற்பொரு திரள்புய மதயானை

மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடுபணிவேனே

முத்தமிழடைவினை முற்படுகிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே

முப்புர மெரிசெய்த அச்சிவனுறைரதம்
அச்சது பொடி செய்தஅதி தீரா

அத்துயரது கொடு சுப்பிரமணி படு
அப்புன மதனிடை இபமாகி

அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மண மருள்பெருமானே

## 2

ப்ரபோ கணபதி புரிபூரண வாழ்வருள்வாயே —2

சார்ந்து வணங்கி துதி பாடி ஆடி உந்தன்
சந்நதி சரணடைந்தோமே
சாந்த சித்த சௌ பாக்கியம் யாவையும்
தந்தருள் சற்குரு நீயே —ப்ரபோ

ஆதிமூல கணநாத கஜானன அற்புத தவள சொரூபா
தேவ தேவ ஜெய விஜய விநாயக
சின்மய பரசிவ தேவா —ப்ரபோ

தேடி தேடி எங்கோ ஓடுகின்றார் உள்ளே
தேடி கண்டு கொள்ளலாமே
கோடி கோடி மதயானைகள் பணி செய்ய
குன்றென விளங்கும் செம்மானே —ப்ரபோ

ஞான வைராக்கிய விசார ஸாரஸ்வர
ராகாலய நடனபாதா
நாமபஜன குண கீர்த்தன நவவித
நாயக ஜெய ஜெகந்நாதா — ப்ரபோ

பார்வதி பால அபார வார வர
பரமபகவ பவ தரணா
பக்தஜன சமுக ப்ரணவ விநாயக
பாவன பரிமள சரணா — ப்ரபோ

# 3

பிள்ளையார் பிள்ளையார் பெருமை வாய்ந்த பிள்ளையார் –2

ஆற்றங்கரை மீதிலே அரச மரத்து நிழலிலே
வீற்றிருக்கும் பிள்ளையார் வினையை தீர்க்கும் பிள்ளையார்

மஞ்சளினால் செய்யினும் மண்ணினாலே செய்யினும்
ஐந்தெழுத்து மந்திரத்தை நெஞ்சிலாழ்த்தும் பிள்ளையார்

ஆறுமுக வேலனுக்கு அண்ணனான பிள்ளையார் – நேரும்
துன்பம் யாவையும் நீக்கிவைக்கும் பிள்ளையார்

அவல்கடலை சுண்டலும் அரிசிமாவு கொழுகட்டையும்
கவலைஇன்றி உண்ணுவார் கருணை கொண்டு அருளுவார்

கலியுகத்து விந்தைகளை காணவே அனுதினமும்
எலியின் மீது ஏறியே இங்கும் அங்கும் சுற்றுவார்

# 4

கணேச சரணம் சரணம் கணேசா
கணபதி பகவனே சரணம் கணேசா
சரணம் கணேசா வரணும் கணேசா
கணேச சரணம் சரணம் கணேசா

கன்னிமூல கணபதி சரணம் கணேசா
கண்கண்ட தேவா சரணம் கணேசா
கலியுக வரதா சரணம் கணேசா
காக்கும் கடவுளே சரணம் கணேசா — கணேசா

பார்வதி புத்திரா சரணம் கணேசா
பரம தயாளா சரணம் கணேசா
அனாத ரக்ஷகா சரணம் கணேசா
ஆபத் பாந்தவா சரணம் கணேசா — கணேசா



# சரஸ்வதி ஸ்துதி

ஜெக ஜனனீ ஜெகன்மாதா
    வாணி சரஸ்வதி வாக்தேவி

வாணி சரஸ்வதி வாக்தேவி
    வீணா பாணி சரஸ்வதி — ஜெக

வீணா பாணி சரஸ்வதி
    பன்னகை வேணி கலைவாணி — ஜெக

பன்னகை வேணி கலைவாணி
    புஸ்தக பாணி சரஸ்வதி — ஜெக

புஸ்தக பாணி சரஸ்வதி
    வித்யாதாயினி நமோஸ்துதே — ஜெக

# குரு ஸ்துதி

ஸத்குரு நாதனே வா வா வா
சச்சிதா நந்தனே வா வா வா

தீன தயாளனே வா வா வா
என் குரு நாதனே வா வா வா — ஸத்குரு

கோபி நாத குருவே வா வா வா
ஸத்குரு நாதனே வா வா வா — ஸத்குரு

ஜெய ஜெய சங்கர! ஹர ஹர சங்கர
ஹர ஹர சங்கர ! ஜெய ஜெய சங்கர

காலடி சங்கர ! காமகோடி சங்கர
காமகோடி சங்கர ! காலடி சங்கர — ஸத்குரு



# முருகன் ஸ்துதி

பச்சை மயில் வாகனனே சிவ பாலசுப்ரமணியனே வா
என் இச்சையெல்லாம் உன்மேலே வைத்தேன்
எள்ளளவும் பயமில்லையே — பச்சை

அலைகடல் ஓரத்திலே — எங்கள்
அன்பான முருகனே வா
அனுதினம் பூஜை செய்தோம் — உனக்கு
அனந்த கோடி நமஸ்காரம் — பச்சை

பறங்கிரி தேவனே வா — எங்கள்
சித்தமெல்லாம் உருகிடவே
சிந்தைதனில் உருவாகும் — முருகா
அடியார்க்கு அருள் புரிவாய் — பச்சை

கொச்சை மொழி ஆனாலும் — உன்னை
கொஞ்சி கொஞ்சி பாடிடுவேன் — இங்கு
சர்ச்சை யெல்லாம் மறைந்ததையா — முருகா
எங்கும் சாந்தியும் நிறைந்ததையா — பச்சை

பழனிமலை வேலவனே – பால்
காவடி எடுத்து வந்தோம்
பாமாலை பாடி நின்றோம் – முருகா
பக்தர்களை காத்திடுவாய் – பச்சை

சுவாமிமலை வேலவனே – எங்கள்
சுவாமிநாத வேலவனே – சுக
போகங்கள் அனைந்தும் தந்த – முருகா
சூர சம்ஹாரனே வா – பச்சை

நெஞ்சமதில் கோவில் வைத்தேன் – அதில்
நேர்மையெனும் தீபம் வைத்தேன் – உன்
செஞ்சிலம்பு கொஞ்சிடவே – முருகா
சேவற் கொடி மயில் வீரா – பச்சை

ஆடாதவரை ஆடவைப்பாய்
பாடாதாரை பாட வைப்பாய்
கூடாதாரை கூட வைப்பாய் – முருகா
குன்று தோறும் குடியிருப்பாய் – பச்சை

# 2

ஸுப்ரமண்யம் ஸுப்ரமண்யம் சிவ சிவ சிவ சிவ
ஸுப்ரமண்யம்
ஸுப்ரமண்யம் ஸுப்ரமண்யம் ஷண்முக நாதா ஸுப்ரமண்யம்

ஓம் சரவணபவ ஸுப்ரமண்யம்
குரு சரவணபவ ஸுப்ரமண்யம்
குரு சரவணபவ ஸுப்ரமண்யம்
குமர குரு பரா ஸுப்ரமண்யம் – ஸுப்ரமண்யம்

சிவகுரு பரா சிவ ஸுப்ரமண்யம்
குருபர ஹரசிவ ஸுப்ரமண்யம்
குருபர ஹரசிவ ஸுப்ரமண்யம்
கூர்வடி வேலா ஸுப்ரமண்யம் – ஸுப்ரமண்யம்

ஓம் ஓம் முருகா ஸுப்ரமண்யம்
ஓம்கார ரூபா ஸுப்ரமண்யம்
கந்தா கடம்பா கருணாஹரனே
கதிர்வடிவேலா ஸுப்ரமண்யம் – ஸுப்ரமண்யம்

# 3

பாசி படர்ந்தமலை முருகையா
பங்குனிதேர் ஓடும்மலை முருகையா
ஊசி படர்ந்த மலை முருகையா
உத்திராட்சம் காய்க்கும் மலை முருகையா
மலைக்குள் மலை நடுவே முருகையா
மலையாளம் தேசம் அப்பா முருகையா
மலையாளம் தேசம் விட்டு முருகையா
மயிலேறி வருவாய் இப்போ முருகையா
அந்த மலைக்குயர்ந்த மலை முருகையா
ஆடும் பழனிமலை முருகையா
எந்த மலையை கண்டு முருகையா
ஏறுவேன் சன்னதிமுன் முருகையா
தவறாமல் கை கொடுப்பாய் முருகையா
தணிகை வேலவனே முருகையா

வேல் வேல் முருகா ! வெற்றிவேல் முருகா
வேலனுக்கு அரோஹரா ! முருகனுக்கு அரோஹரா

# 4

சின்ன சின்ன பாலன் சிவ பாலன்
வண்ண மயில் ஏறும் வடிவேலன்

குன்றமெங்கிலும் குடியிருப்பான்
குறவர் குழுவிலும் கொலுவிருப்பான்
குன்றக்குடி வேலனே குறத்தி மணாளனே
குறைகளை தீர்த்திட இங்கே வருவாய் – சின்ன

தந்தை தாயையும் துறந்து விட்டாய்
தன்னந்த தனிமையில் நின்று விட்டாய்
தங்கத் தமிழ் தேவனே தாமரை பொற்பாதமே
தயவுடனே வந்து அருள் புரிவாய் – சின்ன

ஔவை பாட்டி அன்று அழைக்கையிலே
வந்து நின்றயே மரத்தினிலே – நாவல்
சுட்ட பழம் வேண்டுமா? சுடாப்பழம் வேண்டுமா?
என்றே ஔவைக்கு அருள் புரிந்தாய் – சின்ன

எங்கள் உள்ளத்தில் உறைந்திடுவாய்
எங்கள் வாழ்விலும் ஒளிதருவாய்



# சிவஸ்துதி

ஓம் சிவாய ஓம் சிவாய ஓம் சிவாய சங்கரா
நமசிவாய சங்கரா ! சம்போசிவ சங்கரா !
சதாசிவ சங்கரா ! சாந்த சிவ சங்கரா !
சிசதரனே சுந்தரரேச ஓம்சிவாய சங்கரா

ஆனைமுகன் தந்தையாரே ஓம் சிவாய சங்கரா....
ஆறுமுகன் தந்தையாரே ஓம் சிவாய சங்கரா...
ஐயப்பன் தந்தையாரே ஓம்சிவாய சங்கரா....

கங்கையை தரித்தவனே ஓம்சிவாய சங்கரா...
காசிவிஸ்வ நாதனே ஓம்சிவாய சங்கரா...
ஆடும் பாம்பு அணிந்தவனே ஓம்சிவாய சங்கரா...
பார்வதி மணாளனே ஓம்சிவாய சங்கரா...

வைக்கத்தப்பனே ஓம்சிவாய சங்கரா...
ரத்தின கிரீசனே ஓம்சிவாய சங்கரா...

# 2

ஹர ஹர போலா சிவ சிவ போலா
பம்பம் போலா.... போலேலா... போலேலா...

நந்தி வாகனா நாகபூஷண சந்திரசேகரா ஜடாதரா
கங்கா தரஹர கௌரி மனோகர கிரிஜா ரமணா சதாசிவா
—ஹர ஹர போலா

கைலாசவாசா கனகசபேசா கௌரி மனோகர விக்னேசா
மையானவாசா சிதம்பரேசா நீலகண்ட மகாதேவா
– ஹர ஹர போலா

சூலாதாரா ஜோதிப்பிரகாசா விபூதி சுந்தர பரமேசா
பம்பம் பம்பம் டமருகநாதா பார்வதி ரமணா சதாசிவா
– ஹர ஹர போலா



# அம்பாள் ஸ்துதி

வளமிகுந்த சோலையதாம் வடவேதாரண்ய மதில்
திருவேற்காடென்னுமிடம் கொண்டவளாம் கருமாரி
எங்கள்குல தெய்வமம்மா எங்கள் குறை தீருமம்மா
உங்கள் மலர் பாதமதில் வணங்கிடுவோம் மாரியம்மா

ஆயிரம்கண் கொண்டவளாம் ஆயிமகமாயியவள்
ஆங்காரம் கொண்டவளாம் எங்கள் கருமாரியவள்
கருமாரி என்ற பெயர் கேட்டாலே மெய்சிலிர்க்கும்
கண்டவர்க்கு வழிபிறக்கும் எங்கள் கருமாரியவள்

—வளமிகுந்த

வைரப்பூ மணிமுடியாள் எங்கள் கருமாரியவள்
வைர ஒளி கொண்டவளாம் எங்கள் கருமாரியவள்
காதணிகள் பொற்பதக்கம் கொண்ட கருமாரியவள்
கைவங்கி கொண்டவளாம் எங்கள் கருமாரியவள்

— வளமிகுந்த

நீரணிந்து காண்பவளாம் எங்கள் கருமாரியவள்
நெற்றியினில் குங்குமம் கொண்ட கருமாரியவள்
குங்கும ப்ரியையவள் எங்கள் கருமாரியவள்
குலம் விளங்க வழி செய்வாள் எங்கள் கருமாரியவள்
—வளமிகுந்த

பாலும் இளநீருடனே பன்னீரும் நீராட்டி
சீராக வேண்டி விட்டால் தீராத நோய் தீர்பாள்
நோய்தீர்க கருமாரி நேரினிலே வந்திடுவாள்
நற்புத்தி கூறிடுவாள் எங்கள் கருமாரியவாள் — வளமிகுந்த

நல்லவர்க்கு நல்லவளாம் எங்கள் கருமாரியவாள்
நன்மைபல செய்பவளாம் எங்கள் கருமாரியவாள்
கால்தண்டையெட்டு சுத்தும் கொண்டவளாம் கருமாரி
கண்கண்ட தெய்வமம்மா எங்கள் கருமாரி — வளமிகுந்த



# நாராயண ஸ்துதி

ஹரி நாராயண ஹரி நாராயண
ஹரி நாராயண நாராயணா – ஓம்
ஹரி நாராயண ஹரி நாராயண
ஹரி நாராயண நாராயணா

நொந்துடலும் கிழமாகி தளர்ந்த பின்
நோயில் நொடுங்கிலும் போதும் – ஜீவ
நாடிகள் நைந்திடும் போதும் – மனமெண்ணிடுமோ
தெரியாது... தெரியாது... தெரியாது
சிந்தை கசிந்துன்னை கூவியழைக்கின்றேன்
காத்தருள் புரிவாய் நாராயணா ஓம் – ஹரி நாராயண

நீடு கபம் கோழை ஈழை நெருங்கி – என்
நெஞ்சையடைத்திடும் போதும் – விக்கி

நாவும் குளறிய போதும் – மனமெண்ணிடுமோ
தெரியாது... தெரியாது... தெரியாது
நான் அன்றுனை கூவிட இன்றழைத்தேன்
நீர் வந்தருள் புரிவாய் நாராயணா ஓம்
– ஹரி நாராயண

என் பொருள் என்மனம் என்றெதெல்லாம் – இனி
இல்லையென்றாகிடும் போதும் – நான்
ஆடி அடங்கிடும் போது – மனமெண்ணிடுமோ
தெரியாது... தெரியாது.. தெரியாது
நான் அன்றுனை கூவிட இன்றழைத்தேன்
நீர் ஆண்டருள் புரிவாய் நாராயணா ஓம்
– ஹரி நாராயண

உற்றவர் பெற்றவர் மற்றவர் சுற்றமும்
ஒவென்று நின்றிடும் போதும் – உயிர்
ஒசைகள் ஒய்ந்திடும் போதும் – மனமெண்ணிடுமோ
தெரியாது... தெரியாது... தெரியாது
இன்று உன்பதம் பணிந்தேயழைத்தேன் – ஸ்ரீ
அச்சுதனே ஹரி நாராயணா ஓம் – ஹரி நாராயண

வந்தெம தூதர் வளைத்து பிடித்தெனை
வாவென்று இழுத்திடும் போதும் – என்
ஆவி பிரிந்திடும் போதும் – மன மெண்ணிடுமோ
தெரியாது... தெரியாது... தெரியாது...
அந்த அந்தியம் நீ வர இன்றுனை
அழைத்தேன் ஆண்டருள்புரிவாய் நாராயணா ஓம்
– ஹரி நாராயண

# 2

ஹரி நாராயண ஹரி நாராயண ஹரி நாராயண ஹரி
கிருஷ்ணா
ஹரி நாராயண ஹரி நாராயண குருவாயூர் வாழும் பகவனே!

அடியேன் செய்துள்ள தோஷங்கள் எல்லாம்
பொடி பொடிச்சுடன் கழைவானாய்
அடிமலர் நின்று உதிக்கோணம் – பக்தி
குருவாயூர் வாழும் பகவானே —ஹரி நாராயண

இன்று நின்பாதம் சேருவான் பக்தி
வன்னு சேரணும் வழிபோலே
வன்னென்னே கடாக்ஷிச்சிடேணம்மே
குருவாயூர் வாழும் பகவானே – ஹரி நாராயண

உண்டு சங்கட மோக பாசத்தால்
கொண்டு ஞான் இதா அலையுன்னு
பண்டு ஞான் செய்த துரிதத்தின் பலன்
குருவாயூர் வாழும் பகவானே – ஹரி நாராயண

எந்து ஞானினி வேண்டது கிருஷ்ணா
தண்டிச்சு மோக பாசத்தே
சந்திச்சி நின்னே காணேணும் கிருஷ்ணா
குருவாயூர் வாழும் பகவானே —ஹரி நாராயண

அந்தி காலத்தே பந்துவாய் வந்நே
அந்திகண் மீதி தீர்தென்ன
அந்திகே நின்னே காணேணம் கிருஷ்ணா
குருவாயூர் வாழும் பகவானே —ஹரி நாராயண

குருவாயூர் வாழும் பகவானே கிருஷ்ண
கருணாசாகர கார் வண்ணா
கார்வண்ணா நின்றே கருணை வேணுமென்
குருவாயூர் வாழும் பகவானே — ஹரி நாராயண

# 3

ராதே ராதே ராதே ராதே ராதே கோவிந்தா
ராதே ராதே கோவிந்தா.... ராதே கோவிந்தா
பிருந்தாவன சந்திரா... அனாத நாதா
தீனபந்தோ ராதே கோவிந்தா

யசோத பால யதுகுலதிலகா ராதே கோவிந்தா...
நந்த குமாரா நவநீத சோரா ராதே கோவிந்தா...
காளிங்க நர்த்தன கம்ச விதூஷண ராதே கோவிந்தா...
தேவகி புத்ரா தேவ தேவா ராதே கோவிந்தா...
பாண்டுரங்கா பண்டரிநாதா ராதே கோவிந்தா..
பக்த வச்சல பாகவதப்பிரியா ராதே கோவிந்தா...
வேணுகோபால விஜயகோபால ராதே கோவிந்தா...



# ஸ்ரீ ஐயப்ப ஸ்துதி

ஐயன் வந்திடுவாரே – தென்
குளத்தூரில் ஐயன் வந்திடுவாரே

நெஞ்சமதில் ஈரண்டு நிச்சயமாய் வந்திடுவார்
சஞ்சலத்ததை விட்டு விட்டு நெஞ்சுருக கூப்பிடுவோம்
– ஐயன்

பக்தன் குரல் கேட்டு விட்டால் பாய்ந்தோடி வந்திடுவார்
சரணம் ஒன்று கேட்டுவிட்டால் இத்தருணம் வந்திடுவார்
– ஐயன்

கையில் பிரம்புடனே கடும்புலி வாகனத்தில்
கற்பூரம் கண்டிடவே கண்டிப்பாக வந்திடுவார் –ஐயன்

மண்டலம் புகழும் இந்த மணிகண்டன் சன்னதியில்
ஏழை நம்மை காத்திடவே எங்கிருந்தோ வந்திடுவார் – ஐயன்

# 2

சரணமய்யப்பா ஸ்வாமி சரணம் ஐயப்பா
சரணமய்யப்பா ஸ்வாமி சரணம் ஐயப்பா

சபரிமலையிலலே ஸ்வாமி வீற்றிருக்கிறார்
சரணம் அழைத்தால் ஸ்வாமி ஓடிவருவார் —சரணமய்யப்பா

பொன்னம்பலத்திலே ஸ்வாமி புனிதமானவன்
பொன்னுபதினெட்டில் ஸ்வாமி தெய்வமானவன்
— சரணமய்யப்பா

அச்சங்கோவிலில் ஸ்வாமி அரசனானவன்
கம்பங்குடியிலே ஸ்வாமி அடிமையானவன் — சரணமய்யப்பா

எருமேலியில் ஸ்வாமி கிராத சாஸ்தா
எங்களுக்கெல்லாம் ஸ்வாமி தர்ம சாஸ்தா — சரணமய்யப்பா

பந்தளத்திலே ஸ்வாமி ராஜகுமாரன்
பக்தர் நெஞ்சிலே ஸ்வாமி பச்சிளம்பாலன் — சரணமய்யப்பா

# 3

பவனி வராரிங்கே ஸ்வாமி சரணம் ஐயப்பா
வாவர் ஸ்வாமி கூடவரார் சரணம் ஐயப்பா
காவலர்கள் கூடவரார் சரணம் ஐயப்பா
ஆவலோடு கூப்பிடுவோம் சரணம் ஐயப்பா —பவனி

அம்பும் வில்லும் கையிலேந்தி ஸ்வாமி வருகிறார்
எம்பெருமான் துள்ளி துள்ளி ஆடிவருகிறார்

துன்பமெல்லாம் தீர்த்திடவே பவனி வருகிறார்
இன்பமோடு கும்பிடுவோம் சரணம் ஐயப்பா —பவனி

தந்தை தாயுமான ஸ்வாமி பவனி வருகிறார்
வேதியர் சபை நடுவே ஸ்வாமி வருகிறார்
பூதபடைகளுடனே ஐயன் வருகிறார்
இத்தருணம் காத்திடுவார் சரணம் ஐயப்பா — பவனி

கடகடவென பேரிமுழங்க ஸ்வாமி வருகிறார்
கொட்டு வாத்தியம் முழங்கிடவே ஐயன் வருகிறார்
மாடன் சடையன் பொருளன் இருளன் சரணம் ஐயப்பா
கலகலவென சலங்கை குலுங்க பவனி வருகிறார் —பவனி

# 4

யானைமுகன் சோதரா – புகழ்
எருமேலி வாழ்நாயகா – முன்பு
மானைத்தேடி சென்ற வடிவேலவன்
தம்பி வருவாயே குருநாதனே

மலைமேவும் மணிகண்டனே – எந்தன்
மனம் தன்னில் வாழ் மன்னனே
தலைவலி தீர்த்தவன் தாயின் குறைமாய்த்தவன்
எந்தன் கலிதீர வழி தந்தவன் — யானை

அடியார்கள் உருவானவன் என்றும்
அன்பாலே தனைத்தந்தவன் – வரும்
இடர்யாவையும் வென்று துணையானவன்
படிபதினெட்டில் வழி காட்டுவான் — யானை

# 5

ஸ்வாமி பொன்னைய்யா சரணம் பொன்னைய்யா
சபரிகிரி நாயகனே சரணமய்யா – ஸ்வாமி...

அச்சங்கோவில் அரசனென்றும்
ஆரியங்காவையா வென்றும்
அடியார்கள் அழைப்பதெல்லாம் உன்னைத்தானோ – சபரிகிரி

வில்லாளி வீரனென்றும், வீரமணி கண்டெனன்றும்
வீரமாய் புகழ்வதெல்லாம் உன்னைத்தானோ – சபரிகிரி

ஆற்றில் ஒருகாலும் வைத்தே, சேற்றில் ஒருகாலும் வைத்தே
அல்லல் படும் நிலையைப் பாரய்யா – சபரிகிரி

எப்பிழைகள் செய்தாலும் அப்பிழைகள் பொறுத்தருள்வாய்
ஆரியங்காவில் வாழும் ஐயவே – சபரிகிரி

உற்றாரும் யாரும் இல்லை உறவினர்கள் எவரும் இல்லை
உன்னையே நம்பி வந்தோம் ஐய்யப்பா – சபரிகிரி

# 6

வன்புலி மேல் ஏறிவரும் – எங்கள்
வீரமணி கண்டனே வா – உன்
வீர விளையாடல்களைப் பாட
வாணி தடை கூறவில்லை – வன்புலி

கொஞ்சி கொஞ்சிப் பேசி வரும் – உந்தன்
பிஞ்சு மொழி கேட்டிடவே – அந்த

பந்தளத்தோர் செய்த தவம் – இந்த
பாமரன் நான் செய்யவில்லையே – வன்புலி

பாலெடுக்க புலியெதற்கோ – உன்
பார்வை தான் சக்தியற்றதோ – அருட்
பார்வையது போதுமப்பா – ஞான
பால் பொழிய வேண்டுமப்பா – வன்புலி

வில்லும் அம்பும் கையில் எதற்கோ – அந்த
வாவரைத்தான் வெற்றிக் கொள்ளவோ – உன்
பக்தர்களின் துயர்களையே – நீ
வேட்டையாடி விரட்டிடவோ – வன்புலி

காந்தமலை ஜோதி எங்களை – ஒரு
காந்தம் போல் இழுக்குதப்பா – காஞ்சி
க்ாமகோடி நாதன் கண்களில் – உன்னைக்
காண அருள் புரியுமய்யா – வன்புலி

# 7

ஸ்ரீ தர்ம சாஸ்தா பாஹிமாம்
ஸ்ரீ சபரீஸா பாஹிமாம்
மணிகண்டனே ஸ்ரீ பாஹிமாம்
கலிநாசனே ஸ்ரீ ஐயப்பா

மோஹினி சுதனே மோஹனரூபா
மேஹ மகற்றுக ஞங்களே
மண்டல கால மிதா வந்தலோ
மணிமாலையும் கழுத்தில் வீழ்ந்தலோ
என் மனஸாக மயங்கி போயல்லோ
எம்மை காத்து ரக்ஷிகனே ஐயப்பா – ஸ்ரீ தர்ம

வன்புலி முதுகில் கயறிய பகவான்
வன்மலைக் கேற்றுக ளுங்களே – உன்
மகர விளக்கொண்ணு காணவே
மாமலையாக நடந்து வந்தல்லோ
மாமணி பீடத்தில் வாழும் தெய்வமே
எம்மை காத்து ரக்ஷிகனே ஐயப்பா – ஸ்ரீ தர்ம

படி பதினெட்டில் கயறிய சேஷம்
சிவ சுதம் சுயரூபம் காணுவான்
நின் சுயரூப தரிசனம் காணவே
மாமலையாக நடந்து வந்நல்லோ
மாமணிபீடத்தில் வாழும் தெய்வமே
எம்மை காத்து ரக்ஷிகனே ஐயப்பா – ஸ்ரீ தர்ம

## 8

சம்போ மகாதேவனே சம்பூதன் குமாரனே
சரணவ சோதர பாலனே சரணம் சரணம் ஐயனே

பம்பாதீர வாசனே பந்தள ராஜன் செல்வனே
வன்புலி வாகன தேவனே துன்பம் தீர்க்கும் ஐயனே –சம்போ

மஹிக்ஷி மர்த்தன சுந்தரா மலர்மகள் கொஞ்சும் கோமளா
மரகத மணியுடன் மைந்தனே மாமலைவாழும் ஐயனே
– சம்போ

பலபல கிருதிகள் பாடுவன் பதமலர்தொழுதேன் ஐயனே
பரிதாபத்தை தீர்கவே பதினெட்டாம்படி கேற்றனே – சம்போ

பணகூசயனாம் மைந்தனே பாரில் பரம ஏழை நான்
யாரும் துணை எனக்கில்லையே ஹரிஹர சுதனாம் ஐயனே
–சம்போ

# 9

அய்யனே நின்சரணம் – மனோஹர
மெய்யனே நின்சரணம்
துனபத்தை நீக்கி எங்கள் – பக்தியால்
இன்பத்தை தந்திடுவாய் (அய்யனே)

மஹிஷி மர்த்தனனே – மணிகண்ட
மணிமய பூஷணனே
மோஹமெல்லாம் அகற்றி – அனுதினம்
அல்லல் ஒழித்திடுவாய் (அய்யனே)

கார்த்திகை ஒன்றாம் நாளில் – ஸ்வாமியின்
முத்திரை தரித்திடுவோம்
காடுமலை தன்னிலே – அன்பர்கள்
கஷ்டம் துலைத்திடுவாய் (அய்யனே)

எருமேலி சாஸ்தா – சபரீசா
சரணம் ஐயப்பா
எம்பிரானைத் துதிப்போம் – ஸ்வாமி
எங்கள் வினைத்தீர்பாய் (அய்யனே)

அழுதையில் மூழ்கி – ஸ்வாமி
கல்லும் எடுத்தேனே
கரிமலை கடினம் – ஐயப்பா
காத்து ரக்ஷித்திடுவாய் (அய்யனே)

பம்பையில் தீர்த்தமே – பகவான்
பாதம் பரமானந்தம்
பாவம் அகற்றிடவே – பக்தியால்
போற்றி பணிந்திடுவோம் (அய்யனே)

கணபதி பகவான் – ஸ்வாமி
சரணம் ஐயப்பா
மாணிகை புறத்தம்மா – மாதேவி
மஞ்சமாதா சரணம் (அய்யனே)

சபரிகிரீசா ஐயப்பா சாந்தியளித்திடுவாய்
சரணம் நீயேகதி மணிகண்ட சாஸ்வத ப்ரம்மம் நீயே
(அய்யனே)

சபரிமாமலையா சரண சப்தமும் கேட்கலையோ
தபஸில் சிந்தனையா ஸ்வாமி தருணம் வந்தெனையாள்
(அய்யனே)

# 10

தேவாதி தேவ சரணம்
தேவாதி தேவ சரணம் (தே)

பக்த வத்ஸலனே தேவா
பக்திக்குடையவனே வா வா – சிவ
பார்வதி பாலா சரணம்
சரணம் ஸ்வாமி சரணம் (தே)

பூதகண நாதனே தேவா
வேத முதல்வனே வாவா – பிரணவ
நாதத்தின் வடிவே சரணம்
சரணம் ஸ்வாமி சரணம் (தே)

எங்கும் நிறைந்தாய் தேவா
எங்கள் குல தெய்வமே வாவா
ஏழைப்பங்காளா சரணம் – பரம
சரணம் ஸ்வாமி சரணம் (தே)

கலியுக வரதா தேவா
கரிமுகன் தம்பியே வா வா – எங்கள்
கண்கண்ட தேவா சரணம்
சரணம் ஸ்வாமி சரணம் (தே)

# 11

கல்லும் முள்ளும் நிறைந்த வனத்தில்
நான் ஆதிவ்ய பாதங்கள் தேடி
ஆளும் சம்சார ஆழியில் அக்கரை
சத்யமாம் ஜோதியை தேடி
கரிமலையும் அழுதையும் மகாநதி பம்பையும்
இளமலரும் வண்டுகளும் ஏகாந்த மேகமும்
அகவிருள் அகற்றிடும் கனகமணி தீபமாம்
வில்லாளி வீரன் நாமம் சொல்லவே (கல்லும்)

மலையேறும் காலடிகள் அடையும் நடைவழிகள்
பதினெட்டு திருப்படிகள் ஆக வேண்டும்
நாவினில் வருகின்ற தீயசொல் வார்த்தைகள்
அமர வேதாந்தங்கள் ஆக வேண்டும்
பஞ்ச பூதத்தால் உருவான என்தேகம்
பாவன கோவிலாய் மாற வேண்டும் (கல்லும்)

ஜென்ம ஜென்மாந்திர புண்ணிய பாவங்கள்
இருமுடிக்கெட்டாக ஏற்ற வேண்டும்
மோகாந்த நித்திரைகள் மணிகண்டேஸ்வர
தியான மனோலயம் ஆக வேண்டும்
காமமும் கர்மமும் லோபமும் மோகமும்
உன்பாத பக்தியாய் மாற வேண்டும் (கல்லும்)

# 12

சரணமய்யா சரணமய்யா ஸ்வாமியே
சரணமய்யா சரணமய்யா ஸ்வாமியே

நெற்றியிலே நீறணிந்து நீல ஆடை தாங்கியே
சுற்றி வந்து ஐயன் பாதம் தேடினேன்
சபரிமலை தன்னை நோக்கி ஓடினேன் –அங்கே (சரணமப்பா)

பவக்கடலை கடந்து சென்று பரமனடி சேர்ந்திடவே
தவக்கோலமாம் துளசிமாலை தாங்கினேன்
தாரணியில் உன்புகழைப் பாடினேன் –அங்கே (சரணமப்பா)

ஸ்வாமியே – ஐயப்போ
ஐயப்போ – ஸ்வாமியே

ஸ்வாமி திந்தக்கத்தோம் – ஐயப்ப திந்தக்கத்தோம்
ஐயப்ப திந்தக்கத்தோம் – ஸ்வாமி திந்தக்கத்தோம்

சரமெடுத்து தீர்த்தமாடி வேட்டையாடி கூட்டம் கூடி
பேட்டையிலே துள்ளி வந்தேன் ஸ்வாமியே – அது
பேரானந்தம் பேரானந்தம் ஸ்வாமியே –அங்கே (சரணமப்பா)

இருமுடியும் தாங்கிக் கொண்டு பெருவழியில் நடக்கையிலே
கரிமலையில் கதறுகிறேன் ஐயனே – என்னைக்
காத்தருள வேண்டுகிறேன் மெய்யனே –அங்கே (சரணமப்பா)

பாவனமாம் பம்பாதன்னில் பாலனே உன்னைக்கண்டு
பாட்டுப்பாட பாவ வினை போகுதே
பக்தியோடு கை உனையே கூப்புதே –அங்கே (சரணமப்பா)

ஆறுவாரம் நோன்பிருந்து ஆறுமூன்று படியேறி
ஆரவாரக் கூட்டத்துக்கு நடுவிலே
ஆனந்தமாய் தரிசனமும் காண்போமே – அங்கே (சரணமப்பா)

# 13
## எங்கே மணக்குது

அல்லிமலர் வாசம் அது எங்கே மணக்குது
ஹரிஹர சுதனின் மேலே மணக்குது

மல்லிகைப்பூ மரிக்கொழுந்து எங்கே மணக்குது
மரகத மூர்த்தியின் மேலே மணக்குது

முல்லை மலர் வாசம் அது எங்கே மணக்குது
மோகன பாலகனின் மேலே மணக்குது

சம்பங்கிரோஜாவும் எங்கே மணக்குது
சாந்த ஸ்வரூபனின் மேலே மணக்குது

குங்குமப்பூ ஜவ்வாது எங்கே மணக்குது
குளத்துப்புழை பாகனின் மேலே மணக்குது

அத்தர் புனுகு வாசம் எங்கே மணக்குது
அச்சங் கோவில் அரசனின் மேலே மணக்குது

பன்னீரும் கஸ்தூரியும் எங்கே மணக்குது
பந்தள ராஜகுமாரனின் மேலே மணக்குது

சாம்பிராணி வாசனை எங்கே மணக்குது
சபரிமலை உச்சியின் மேலே மணக்குது

கற்பூர வாசனை எங்கே மணக்குது
காந்தமலை ஜோதியின் மேலே மணக்குது

தாழம்பூ வாடையது எங்கே மணக்குது
ஸ்ரீதர்ம சாஸ்தாவின் மேலே மணக்குது

மஞ்சள் பொடி வாசனை எங்கே மணக்குது
மஞ்சமாதா சன்னதியில் தானே மணக்குது

சந்தனம் வாசனை எங்கே மணக்குது
சாஸ்தாவின் சன்னதியில் தானே மணக்குது.

# 14

வணக்கம் வணக்கம் குருஸ்வாமி
வாழ்க வாழ்க குருஸ்வாமி
அன்பு கொண்டவர் குருஸ்வாமி
அருமை நண்பராம் குருஸ்வாமி

ஆறுதல் தருபவர் குருஸ்வாமி
ஆபத் பாந்தவர் குருஸ்வாமி
இனிமை நிறைந்த எங்கள் குருஸ்வாமி
ஈகையுள்ளவர் குருஸ்வாமி (வணக்கம்)

அடக்கம் நிறைந்த எங்கள் குருஸ்வாமி
ஆற்றல் மிக்கவர் குருஸ்வாமி
பொறுமை நிறைந்த எங்கள் குருஸ்வாமி
பொறுப்புடன் திகழ்வார் குருஸ்வாமி (வணக்கம்)

எளிமையான எங்கள் குருஸ்வாமி
ஏழைப்பங்காளர் குருஸ்வாமி
கருணை நிறைந்தவர் குருஸ்வாமி
கண்போல் காப்பார் குருஸ்வாமி (வணக்கம்)

பண்பு நிறைந்த எங்கள் குருஸ்வாமி
பரிவுடன் காப்பார் குருஸ்வாமி
ஒப்பில்லாத எங்கள் குருஸ்வாமி
ஓங்கு பண்பாளர் குருஸ்வாமி (வணக்கம்)

அடியாரை ஆட்கொண்ட குருஸ்வாமி
ஐயன் மறுவுறு குருஸ்வாமி
அடியேன் வணக்கத்தை குருஸ்வாமி
அன்புடன் ஏற்பீர் குருஸ்வாமி (வணக்கம்)

## 15

இருமுடி தாங்கி ஒரு மனதாகி குருவெனவே வந்தோம்
இருவினை தீர்க்கும் எமனையும் வெல்லும்
திருவடியைக் காண வந்தோம்

பள்ளிக்கட்டுச் சபரிமலைக்குக்
கல்லும் முள்ளும் காலுக்கு மெத்தை
சுவாமியே ஐயப்பா ஐயப்பா சுவாமியே
நெய்யபிஷேகம் சுவாமிக்கு
கற்பூர தீபம் சுவாமிக்கு
ஐய்யப்பன் மார்களும் கூறிக்கொண்டு
ஐயனை நாடிச் சென்றிடுவார்
சபரிமலைக்கு சென்றிடுவார்(சுவாமியே)

கார்த்திகை மாதம் மாலையணிந்து
நேர்த்தியாகவே விரதமிருந்து
பார்த்தசாரதியின் மைந்தனே உனைப்
பார்க்க வேண்டியே தவமிருந்து
இருமுடி எடுத்து எருமேலி வந்து
ஒருமனதாகிப் பேட்டை துள்ளி

அருமை நண்பராம் வாபரைத் தொழுது
ஐயனின் அருள் மலை ஏறிடுவார் (சுவாமியே)

அழுதை ஏற்றம் ஏறும் போது
அரிகரன் மகனைத் துதித்துச் செல்வார்
வாழிகாட்டிடவே வந்திடுவார்
ஐயன் வன்புலி ஏறி வந்திடுவார் (சுவாமியே)

கரிமலை ஏற்றம் கடினம் கடினம்
கருணைக் கடலும் துணை வருவார்
கரிமலை இறக்கம் வந்தவுடன்
திருநதி பம்பை கண்டிடுவார் (சுவாமியே)

கங்கை நதிபோல் புண்ணிய நதியாம்
பம்பையில் நீராடி
சங்கரன் மகனைக் கும்பிடுவார்
சங்கடம் இன்றி ஏற்றிடுவார் (சுவாமியே)

நீலிமலை ஏற்றம்
சிவ பாலனும் ஏற்றிடுவார்
காலமெல்லாம் நமக்கே
அருள் காவலனாய் இருப்பார்
தேக பலம் தா பாத பலம் தா
தேக பலம் தா பாத பலம் தா

தேக பலம் தா என்றால் அவரும்
தேகத்தை தந்திடுவார்
பாத பலம் தா என்றால் அவரும்
பாதத்தைத் தந்திடுவார்
நல்ல பாதையைக் காட்டிடுவார் (சுவாமியே)

சபரி பீடமே வந்திடுவார்
சபரி அன்னையைப் பணிந்திடுவார்

சாங்குத்தி ஆலில் கன்னிமார்களும்
சரத்தினைப் போட்டு வணங்கிடுவார்
சபரிமலை தனை ஏறிடுவார்
கதி என அவரைச் சரணடைவார்
மதிமுகம் கண்டே மயங்கிடுவார்
ஐய்னைத் துதிக்கையிலே தன்னையே மறந்திடுவார்
(சுவாமியே)

பள்ளிக்கட்டுச் சபரிமலைக்கு
கல்லும் முள்ளும் காலுக்கு மெத்தை
சுவாமியே ஐயப்போ ஐயப்போ சுவாமியே
சரணம் சரணம் ஐயப்போ சாமி சரணம் ஐயப்போ

# 16

## படிபாட்டு

ஸ்வாமி சரணம்! ஐயன சரணம் !
ஐயப்பா சரணம்! சரணம் பொன் ஐயப்பா!

கன்னிமூல கணபதி சரணம் பொன் ஐயப்பா
ஸ்வாமி பொன் ஐயப்பா!

ஐயனே பொன் ஐயப்பா
ஸ்வாமியே சரணம் சரணம் பொன் ஐயப்பா (ஸ்வாமி)

எருமேலி வாசா சரணம் பொன் ஐயப்பா...
வாவரின் தோழா சரணம் பொன் ஐயப்பா...
வீரமணி கண்டா சரணம் பொன் ஐயப்பா...
காளைகட்டி ஆஸ்ரமம் சரணம் பொன் ஐயப்பா...

அமுதா நதியே சரணம் பொன் ஐயப்பா...
இஞ்சிப்பாறை கோட்டை சரணம் பொன் ஐயப்பா...
கல்லிடும் குன்றே சரணம் பொன் ஐயப்பா...
உடும்பாறை கோட்டை சரணம் பொன் ஐயப்பா...
முக்குழித் தீர்த்தமே சரணம் பொன் ஐயப்பா...
கரிவலம் தோடே சரணம் பொன் ஐயப்பா...
கரிமலை ஏற்றம் சரணம் பொன் ஐயப்பா...
கரிமலை இறக்கம் சரணம் பொன் ஐயப்பா..
சிறியானை வட்டமே சரணம் பொன் ஐயப்பா...
பெரியானை வட்டமே சரணம் பொன் ஐயப்பா...
பம்பா நதியே சரணம் பொன் ஐயப்பா...
பம்பையின் ஜோதியே சரணம் பொன் ஐயப்பா...
பம்பா கணபதி சரணம் பொன் ஐயப்பா...
நீலிமலை ஏற்றம் சரணம் பொன் ஐயப்பா...
அப்பாச்சிமேடே சரணம் பொன் ஐயப்பா...
சபரிபீடமே சரணம் பொன் ஐயப்பா...
சரங்குத்தி ஆலே சரணம் பொன் ஐயப்பா..
கற்பூர ஆழியே சரணம் பொன் ஐயப்பா...
கொச்சு கடுத்த ஸ்வாமியே சரணம் பொன் ஐயப்பா...
கருப்பண்ண ஸ்வாமியே சரணம் பொன் ஐயப்பா...
வில்லாளி வீரனே சரணம் பொன் ஐயப்பா...
பதினெட்டாம் படியே சரணம் பொன் ஐயப்பா...
படிக்கொரு நமஸ்காரம் சரணம் பொன் ஐயப்பா

1–18

கற்பூர ஜோதியே சரணம் பொன் ஐயப்பா...
காந்தமலை ஜோதியே சரணம் பொன் ஐயப்பா...

செய்த பிழை பொறுத்துச் சிறியேனை ஆட்கொண்டு
சிந்தையில் வருவாயே குளத்தூரில் ஐயனே

வைதாலும் அவர் வாழ அருள்செய்யும் மணிகண்டா
வாயார வாழ்த்தி உன்னை வணங்குவோர்க்கு
என்ன செய்வாய்

தலைபாரம் எடுத்துந்தன் சந்நிதி வந்தோரை
தாயென காப்பாயே அவர் பாரம் ஏற்பாயே
அலையாது எந்தன் மனம் அனுதினம் உனைப்பாட
அருள் செய்ய வருவாயே அடிமலர் தருவாயோ

## ஸ்ரீ சாஸ்தா பஞ்சரத்னம்

லோக வீரம் மஹாபூஜ்யம் ஸர்வ ரக்ஷாகரம் விபும்
பார்வதீ ஹ்ருதாயனந்தம் சாஸ்தாரம் ப்ரணமாம் யஹம்
ஸ்ரீஸ்வாமியே சரணம் ஐயப்பா

விப்ரபூஜ்யம் விஸ்வ வந்த்யம் விஷ்ணு சம்போப்ரியம்ஸுதம்
க்ஷிப்ர ப்ரஸாத நிரதம் சாஸ்தாரம் ப்ரணமாம் யஹம்
ஸ்ரீஸ்வாமியே சரணம் ஐயப்பா

மத்த மாதங்க கமனம் காருண்யாம்ருத பூரிதம்
ஸர்வ விக்னஹரம் தேவம் சாஸ்தாரம் பரணமாம் யஹம்
ஸ்ரீஸ்வாமியே சரணம் ஐயப்பா

அஸ்மத் குலேஸ்வரம் தேவம் அஸ்மத் சத்ரு வினாஸனம்
அஸ்ம திஷ்டப்ரதாதாரம் சாஸ்தாரரம் ப்ராணமாம் யஹம்
ஸ்ரீஸ்வாமியே சரணம் ஐயப்பா

பாண்டியேச வம்ஹதிலகம் கேரளே கேளி விக்ரஹம்
ஆர்த்தத்ராண பரம்வேதம் சாஸ்தாரம் ப்ரணமாம் யஹம்
ஸ்ரீஸ்வாமியே சரணம் ஐயப்பா

பஞ்ச ரத்னாக்கியம் ஏதத்யோ நித்யம் சுத்தபடே நர :
தஸ்ய பிரஸன்னோ பகவான் சாஸ்தா வஸதி மானஸே
ஸ்ரீஸ்வாமியே சரணம் ஐயப்பா

யஸ்ய தன்வந்திரி மாதா பிதா ருத்ரோ பிக்ஷக்தம: தம்
சாஸ்தாரம் அஹம்வந்தே மகா வைத்யம் தயாநிதம்
ஸ்ரீஸ்வாமியே சரணம் ஐயப்பா

பூத நாத ஸதானந்த ஸர்பூத தயா பரா
ரக்ஷ ரக்ஷ மஹாபாஹோ ஸுரஸ்த்ரே துப்யம் நமோ நம:

## சாஸ்தா அஷ்டகம்

ஹரிவராஸனம் ஸ்வாமி விச்வ மோஹனம்
ஹரிததீஸ்வரா ராத்ய பாதுகம்
அரிவிமர்தனம் ஸ்வாமி நித்ய நர்த்தனம்
ஹரிஹராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே.

சரண கீர்த்தனம் ஸ்வாமி சக்தமானசம்
பரணலோலுபம் ஸ்வாமி நர்த்தனாலயம்
அருண பாசுரம் ஸ்வாமி பூதநாயகம்
ஹரிஹராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே.

ப்ரணய சத்யகா ஸ்வாமி ப்ராண நாயகம்
ப்ரணக் கல்பகம் ஸ்வாமி சுப்ரபாஞ்சிதம்
ப்ரணவ மந்திரம் ஸ்வாமி கீர்த்தன ப்ரியம்
ஹரிஹராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே.

துரக வாகனம் ஸ்வாமி ஸுந்தரானனம்
வரகதாயுதம் ஸ்வாமி வேதவர்ணிதம்
குருக்ருபாகரம் ஸ்வாமி கீர்த்தனப்ரியம்
ஹரிஹ்ராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே.

த்ரிபுவனார்ச்சிதம் ஸ்வாமி தேவதமாத்மகம்
த்ரிநயனப்ரபும் ஸ்வாமி–திவ்ய தேசிகம்
த்ரிதஜ பூஜீதம் ஸ்வாமி சிந்திதப்ரதம்
ஹரிஹராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே.

பவபயாபஹம் ஸ்வாமி யாவு காவுகம்
புவன மோகனம் ஸ்வாமி பூதிபூஷனம்
தவள வாஹனம் ஸ்வாமி திவ்ய வாரனம்
ஹரிஹராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே.

களம்ருது ஸ்மிதம் ஸ்வாமி ஸுந்தரானனம்
களப கோமளம் ஸ்வாமி காத்ர மோகனம்
களப கேசரி ஸ்தாமி வாஜி வாஹனம்
ஹரிஹராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே.

சரிதஜனப்ரியம் ஸ்வாமி சிந்திதப்ரதம்
ச்ருதி விபூஷணம் ஸ்வாமி ஸாதுஜீவனம்
ச்ருதி மனோகரம் ஸ்வாமி கீதலாலசம்
ஹரிஹராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே.

சரணம் ஐயப்பா சுவாமி சரணமய்யப்பா
சரணம் ஐயப்பா சுவாமி சரணமய்யப்பா

சுபம்

*ஸ்வாமியே சரணம் ஐயப்பா.*



*Design & Printed*
**Mega Graphics : ☎: 821 6023, 824 1245**